سلسلة مطبوعات المكتب بغير اللغة العربية رقم (36)

# உனக்கோர் கடிதம்


மூலம்

அப்துல்லாஹ் அல் சதான்

தமிழில்

அப்துர் ரஹ்மான் அப்துர் ரஸ்ஸாக்

மேற்பார்வை

முஹம்மத் ஹுசைன்


the cooperatve office for call & guidance at shifa area
Riyadh. p.o. Box 31717 Riyadh 11418 Tel. 4222626

# உனக்கோர் கடிதம்

மூலம்

அப்துல்லாஹ் அப்துல் அஸீஸ் அல் ஈதான்

தமிழில்

அப்துர் ரஹ்மான் அப்துர் ரஸ்ஸாக்

மேற்பார்வை

முஹம்மத் ஹுஸைன்

the cooperative office for call & guidance at shifa area
Riyadh. P.O Box 31717 Riyadh 11418 Tel. 4222626

ح المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بالشفاء، ١٤٢٢هـ

**فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر**

**العيدان ، عبدالله بن عبدالعزيز**

رسالتنا إليك / ترجمة عبدالرحمن عبدالرزاق . – الرياض .

٢٤ص ؛ ١٢ X ١٧ سم .

ردمك : ١–١٨–٨٤٣–٩٩٦٠

( النص باللغة التاميلية )

١ – الإسلام – مبادئ عامة

أ – عبدالرزاق ، عبدالرحمن ( مترجم ) ب – العنوان

ديوي ٢١١ ٢٢/٣١٩٦

رقم الإيداع : ٢٢/٣١٩٦

ردمك : ١–١٨–٨٤٣–٩٩٦٠

بسم الله الرحمن الرحيم

# உனக்கோர் கடிதம்

இச் சிறிய மடலை உனக்கு எழுதுவதில் சந்தோச மடைகின்றோம். உள்ளத்திலிருந்து ஊற்றெடுக்கும் அன்பையும், உனக்கு தெறியப்படுத்திக் கொள்வதோடு, இக்கடிதம் கிடைத்ததும், அதனை சிறந்த முறையில் வாசித்து, ஆழ்ந்து சிந்தித்து, அது கூறும் கறுத்துக் களுக்கு கட்டுப்பட்டு, அதனை முழு மனதுடன் ஏற்றுக்கொள்வாய் எனவும் எதிர் பார்க்கின்றோம்.

உண்மையில் நாம் இதனை உனக்கு அனுப்புவதன் நோக்கமே, நீ சந்தோசமாகவும் நற்பாக்கியத்துடனும் வாழவும், நீ எமது இஸ்லாமிய சகோதரனாக மாறி, நாம் உனது ஆழிய அன்பை பெற்றுக் கொள்வதட்குமாகும்.

எனவே உனது பொன்னான நேரத்தில் சிறிதளவு இதற்காக ஒதுக்கி, எமது இந்த கடிதத்தை வாசித்து, அதிலே கூறப்பட்டுள்ள கருத்துக்கள் என்ன என்பதனை சிந்தித்து, உணர்வதையே எதிர்பார்க்கின்றோம். எமது எதிர்பார்ப்பிற்கேற்றவாறு நீ நடந்து கொள்வாய் என நினைத்து, அதற்காக எமது மனமார்ந்த நன்றியையும் தெறிவித்துக் கொள்கின்றோம்.

## இம்மடலின் என்னக்கரு.

இம் மடலின் மூலம் நாம் உனது சிந்தனைக்கு தெறியப்படுத்த முயற்ச்சிப்பது மனிதன் இவ்வுலகில்

படைக்கப்பட்டதன் நோக்கம் என்ன? இவ்வுலகில் அவனது தொழிற்பாடு என்னவாக இருக்க வேண்டும்? என்பதைப்பற்றியேயாகும். ஒவ்வொரு மனிதனும் சிந்திக்க வேண்டிய இந்த விடயத்தில். உண்மை எதுவென தெறிந்து கொள்ள, நீயும் உனது கருத்துக்களை எமக்கு தெரியப்படுத்துவாய் என எதிர் பார்க்கின்றோம்.

பொதுவாக ஒரு மனிதன் இவ்வுலகின் அடிப்படை நோக்கமில்லாமல், வேரொரு விடயத்தைப்பற்றி தெறியாமல் இருந்தால் அவனை மண்ணித்துவிடலாம். ஆனால் அடிப்படை விடயத்தில் சிந்திக்காமல், அதிலே உதாஷீனமாக இருந்தால், சிந்தனை குறைவாகவுள்ள மனிதனும் கூட, அதனை ஏற்றுக் கொள்ளமாட்டான். காரணம் அதனால் கடைசியில் பெறும் விபரீதங்கள் ஏற்படுவதுடன், மனிதனுக்கு கிடைக்கவிருக்கும் ஈருலக பிரயோஜனமும் கிடைக்காமல் போய் விடுகின்றது.

## ஒவ்வொன்றுக்கும் தொழிற்பாடுகள் இருக்கின்றது.

இந்த உலகைப்பற்றியும், அதிலே படைக்கப்பட்டிருக்கும் சிறிய, பெறிய, படைப்புக்களைப்பற்றியும், சற்று பார்வையிடுவோம். பரந்திருக்கும் இந்த பூமியும், அதிலே இருக்கும் மலைகள், மரங்கள், ஆறுகள், ஜீவராசிகள், மேலிருக்கும் வானம், அதிலே உள்ள நட்ச்சத்திரங்கள், சூரியன், சந்திரன், இது போன்ற எண்ணிலடங்காத படைப்பினங்கள் அனைத்தையும், இவ்வளவு நுட்பமாகவும் ஆச்சரியத்துக்குரிய வகையிலும், யார் படைத்தது ?.

மேலும் இவைகள் அனைத்தும், எந்தவொரு நோக்க முமில்லாமல் தான், படைக்கப்பட்டிருக்கின்றன, என நினைக்கின்றாயா? அல்லது அல்லாஹ் படைத்த ஒவ்வொரு பொருளுக்கும், அவற்றிற்குரிய தொழிற்பாடு என்று ஒன்று இருக்கிறது என நினைக்கின்றாயா? உதாரணத்துக்கு மனிதனுடைய தயாரிப்பில் உருவான பொருட்களான கார், பேனா, இயந்திரம், திறப்பு, போன்றவைகளைக் கூட, மனிதன் வீணுக்காக படைக்கவில்லை என்பதை நீ அறிவாய்.

அவ்வாறு அவன் எந்தவொரு குறிக்கோலுமில்லாமல் அதை உருவாக்கியிருந்தால், அவனைப் பைத்தியக்காரன் என்றே நாம் கூறுவோம். ஆனால் மனிதனுடைய சீரான சிந்தனை, அவன் அவ்வாறு செய்வதை தடுத்துவிடுகின்றது. இதனால் தான் அவற்றில் ஏதாவது தனது தொழிற்பாட்டை சீரான முறையில் செய்யவில்லையானால், அதனது தொழிற்பாட்டை செவ்வனே செய்ய வில்லை என்ற ஒரே காரணத்துக்காக, மனிதன் அதனை விற்கவோ, அல்லது சீராக்கவோ, அல்லது குப்பைத் தொட்டியில் போடவோ, முனைந்து விடுகிறான்.

## மனிதனின் உண்மையான தொழிற்பாடு.

மனிதனால் உருவாக்கப்பட்ட இந்த பொருட்களுக்கே இவ்வாறான தொழிற்பாடுகள் இருக்கும் போது, இவ்வுலகில் அல்லாஹ்வால் படைக்கப்பட்ட மனிதனுக்குள்ள தொழிற்பாடு என்னவென்று, நாம் ஏன் நம்மைக் கேட்டுக் கொள்ளக்கூடாது. இந்தப்பூமியிலே அல்லாஹ் மனிதனை சிறந்த அமைப்பிலும், அழகான உருவத்திலும், சிந்தனாசக்தி, பார்வை, கேள்வி,

சுதந்திரம், போன்ற அருட்கொடைகளை கொடுத்து, ஒரு உயர்ந்த படைப்பினமாக படைத்துள்ளான்.

இவ்வாறு சிறந்த முறையிலும், உயர்ந்த படைப்பின மாகவும் அவனைப் படைத்தது, குடிப்பதற்கும் சாப்பி டுவதற்கும் தானா? அல்லது வீன் விளையாட்டுக்களில் ஈடுபட்டு, தனது வாழ்க்கையை அநியாயமாக அழித் துக்கொள்ளவா? அல்லது உலக ஆசா பாசங்களையும் மனோ இச்சைகளையும் அனுபவிக்கவா? அல்லது கஷ்டப்பட்டு சொத்து செல்வம் சேர்க்கவா? அல்லது அவனுக்கு ஏற்படும் கஷ்டங்களை துன்பங்களை நினைத்து கவலைப்படவா? அல்லது எதற்காக? எந்த நோக்கத்திற்காக? இவ்வாரான இன்னும் எத்த னையோ வினாக்கள்... இவ் வினாக்களுக்கு விடை தேடும் வகையில் நீயும் எம்முடன் கலந்து கொள்வாய், என எதிர்பார்க்கின்றோம்.

அவ்வாறெனின் அவைகளுக்குரிய சரியான விடை என்ன? இதற்கான விடையை அருள்மறை திருக் குர்ஆனும், திருத்தூதர்களும், அகிலத்தின் இரட்ச கனாகிய ஒரே இறைவனையே வணங்க வேண்டும் என்பதனை தெளிவாக வழியுறுத்தியிருக்கின்றனர்

அதாவது உலகிலே வாழும் மனிதனாக, அல்லது கல்லாக, அல்லது மிருகமாக, அல்லது சூரியனாக, அல்லது நெருப்பாக, அல்லது வேறு ஏதாவதாக இருந்த போதிலும், அவைகளை கடவுள்களாக நினைத்து அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காமல் வணக்க வழிபாடுகள் அனைத்தும் ஒருமைப் படுத்தப்பட்டு அல்லாஹ் ஒருவனுக்கே செய்யப்பட வேண்டும் என்பதாகும்.

## உண்மையான இறைவன் யார்?

அழகிய படைப்பாக அல்லாஹ்வால் படைக்கப்பட்டு, சிறந்த அறிவான பகுத்தறிவும் கொடுக்கப்பட்டு, உயர்ந்த படைப்பாக மேம்படுத்திய பின்பும் கூட, பின்வரும் கருத்துக்களை நம்பும் மனிதனைப் பார்த்து, நீ ஆச்சரியப்பட வேண்டாமா?.

- கடவுளால் எந்தவொரு மனிதனின் உடம்பிலும் குடிகொள்ளலாம், அப்போது அந்த மனிதன் கடவுளாகவோ, அல்லது கடவுளின் மகனாகவோ மாறி, முழு மனித இனத்தின், பாவங்களுக்கும் பிராயச் சித்தமாக, அவனே அவைகளை சுமந்து கொண்டு, அதற்குரிய தண்டனையை, அனுபவித்துக் கொள்ளலாம். என்ற கருத்தை ஏற்றுக்கொள்ளல்.
- பூமிக்கோர் கடவுள், சூரியனுக்கோர் கடவுள், சந்திரனுக்கோர் கடவுள், நட்ச் சத்திரங்களுக்கோர் கடவுள், மேகங்களுக்கோர் கடவுள், மலைகளுக்கோர் கடவுள் என, ஒவ்வொரு படைப்பினத்துக்கும் ஒவ்வொரு கடவுள், எனும் பல கடவுள் கொள்கையை ஏற்றுக்கொள்ளல்.
- அடிப்படைக் கடவுளுடன், படைக்கப்பட்ட இன்னும் இரு கடவுள்கள், இருக்கின்றார்கள் எனும், முக்கடவுள் கொள்கையை ஏற்றுக்கொள்ளல்.
- மரணித்ததன் பின், மனிதன் உலகில் வாழும் போது செய்த நன்மை தீமைகளுக்கேற்ப, மறுவுருவம் பெற்று, மறுபடியும் புதியதோர் வாழ்க்கையை ஆரம்பித்தல், எனும் கருத்தை ஏற்றுக் கொள்ளல்.

- மனிதனின் தொழில், நிறம், இனம், போன்ற வைகளுக்கேட்ப மனிதனை வேறுபடுத்தல். உதாரணமாக அல்லாஹ் ஒரு பகுதியினரை தனது முகம் மூலம் படைத்தான் அவர்கள் தான் உயர்ந்தவர்கள், தலைவர்கள் என்றும், இன்னும் சிலரை தனது கையிலிருந்து படைத்தான். இன்னும் சிலரை தனது வயிறு மூலம் படைத்தான். இன்னும் சிலரை தனது இரு கால்களிலிருந்து படைத்தான். அவர்கள்தான், மிகவும் தாழ்வா னவர்கள், இழிவானவர்கள் என, மனிதர்களைப் பிரித்துக் கூறும் மதத்தை ஏற்றுக் கொள்ளல்.

**நீ கண் மூடித்தனமாக பின்பற்றுவதை எச்ச ரிக்கின்றோம்.**

ஒரு மனிதன் சாப்பிடுதல், குடித்தல், உடை அனிதல், திருமணம் முடித்தல், அல்லது வேறு சமூகம் செய்யும் ஒரு பொதுவான விடயத்தில், தனது பெற்றோரையோ, அல்லது வேறு யாரையோ, பின்பற்றி வாழ்வதை மனித னால் ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் தனக்கு அறிவு முதிர்ந்த போதும், தான் சிந்திக்காமல் மற்றவர்களின் கருத்தில் தங்கி, அவர்கள் எதை நம்புகின்றார்களோ, உறுதி கொள்கின்றார்களோ, எதைச் செய்கின்றார் களோ, கூறுகின்றார்களோ, அவைகளை ஆதாரங்க ளின்றியும், அது உண்மையானதா? பொய்யானதா? என சிந்தித்தறியாமலும், கண் மூடித்தனமாக பின்பற்று வதை, சிந்தனையுள்ள எந்த மனிதனும் ஏற்றுக் கொள்ளமாட்டான்.

அது மட்டுமல்ல, இவ்வாறாக கண்மூடித்தனமாக பின் பற்றுவதின் முடிவு, இவ்வுலகில் மட்டுமல்லாமல், மறுமையிலும், கேள்வி கணக்கு, கூலி வழங்கல், சுவர்கம், நரகம், போன்றவைகளில் மிகவும் மோசமான முடிவையே எதிர்நோக்க வேண்டிவரும். மறுமையின் போது இறைவா! இவ்வாறு தான், நான் இம்மனிதரை நல்லவரென நினைத்து, எனது பெற்றோர் மூதாதையர் காட்டித்தந்த வழியை, நல்லது கெட்டது தெரியாமல் பின்பற்றினேன். எனவே என்னை மண்ணித்து விடுவாயாக என்று கூறினாலும் கூட, அதை ஒரு போதும் அல்லாஹ் ஏற்றுக்கொள்ளமாட்டான்.

நீ கண்மூடித்தனமாகப் பின்பற்றும் கொள்கையை விட்டு விட்டு, உனது சிந்தனைக்கு சற்று வேலை கொடுத்து, கீழ் வரும் வினாக்களுக்குரிய விடையை கண்டறிய முயற்ச்சி.

- தற்போது நானிருக்கும் மார்க்கம் சரியானதா? பிழையானதா?
- சரியானதாக இருந்தால் மனோ ரீதியான, அறிவு ரீதியான, ஆதாரங்கள் என்ன?
- எனது இந்த மார்க்கம், எனது வாழ்க்கையை நெறிப்படுத்தி, அதற்கு முக்கியத்துவமளித்து, நான் உருவாகியிருப்பதற்குரிய பெறுமதியை பெற்றுத் தரக் கூடிய பூரண மார்க்கமா? அல்லது வாரத்தில் ஒரு மணி நேரம், நாளிலே சில நாழிகைகள் வணங்கும், அல்லது எனது பெற்றோரையும் மற்றோரையும் பார்த்து, கண்மூடித்தனமாக பின்பற்றிய மார்க்கமா?
- அல்லது என் மனம் விரும்பியவாறெல்லாம் செய்து விரும்பாதவைகளையெல்லாம் புறக்

கனித்து, எந்தவொறு மார்க்கமோ, கொள்கையோ, இன்றி வாழ்வதுதான் சரியா?

- நாம் வாழும் இந்த வாழ்க்கையின் முடிவென்ன? மரணத்துக்குப்பின் நாம் எங்கு செல்கின்றோம்? இவ்வாறான சில முக்கியமான கேள்விகளைக் கேட்டு, காலம் செல்வதட்கு முன், நீ சிறந்த விடைகளுடனும் சிறந்த முடிவுடனும் வெளியேறுவது தான் அவசியமும் அவசரமுமாகும்.

## இஸ்லாம் தான் சத்திய மார்க்கம்.

முஸ்லிம்களாகிய நாம் அறிவியல் ரீதியாகவும், மனோ ரீதியாகவும், சரியான ஆதாரங்களின் மூலமும், இறை மறைக் குர்ஆனும், திருத்தூதரும் காட்டித்தந்த சத்திய மார்க்கம், இஸ்லாம் மார்க்கம் தான் உண்மையான மார்க்கம் எனவும், அதனை வலியுறுத்தவே அனைத்து தூதர்களும் அனுப்பப்பட்டார்கள் எனவும், அதனைத் தவிர வேறு எந்த மார்க்கத்தையும் இறைவன் ஏற்றுக் கொள்ளமாட்டான், என்பதனையும் ஆணித்தரமாக நம்ப வேண்டும்.

அந்த மார்க்கத்தை ஏற்றுக் கொள்ளும்படி நாம் வற்புறுத்தவில்லை. மாற்றமாக இதிலே உங்கள் கவனத்தை சற்று திருப்பி, சீரிய சிந்தனையுடனும், எந்தவொரு பிடிவாதமுமின்றியும், மாற்று சிந்தனைகளின்றியும், எவரையும் கண்மூடித்தனமாக பின்பற்றாமலும், சிறந்த முறையில், இதனை வாசித்து உணருங்கள். அவ்வாறு யார் யாரெல்லாம் சிந்திக்கின்றார்களோ, அவர்கள் அனைவரும் இந்த இஸ்லாம் மார்க்கம் தான், அனைத்து கொள்கை, வணக்க, ரீதியாக உண்மையான மார்க்கம். அதைத்தான் அல்லாஹ்வும் தேர்ந்தெடுத்தி

ருக்கின்றான். மறுமை நாள் வரை எந்த உள்ளங்களும் ஏற்று அமுல் படுத்தக்கூடிய உண்மையான சரியான தெளிவான மார்க்கமாகும், என்ற அதே கருத்தை உருதியாக ஏற்றுக் கொள்வார்கள் என்பதை உரு தியாக நம்புகின்றோம்.

## இஸ்லாம் மனிதனிடமிருந்து எதிர்பார்ப்பது என்ன?.

இஸ்லாம் தான் உண்மையான மார்க்கம். அதிலே எவ்வித மனித கோட்ப்பாடுகளோ, செயற்பாடுகளோ இல்லை. அது உண்மையிலேயே அல்லாஹ்விடமிருந்து தான் இறங்கியது என்பதையும், மனிதர்கள் அனைவரும் அதிலே தேவையுடையவர்கள் என்பதையும், இன்னும் நீ உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டுமெனில், இஸ்லாமிய கொள்கையின் தனித்துவத்தைப் பற்றி பின்வறுமாறு எடுத்தியம்பியுள்ளதை சற்று சீர் தூக்கிப்பார்.

- இஸ்லாமிய கொள்கை அடிப்படையிலிருந்தே தெளிவானது. அதிலே எவ்வித மதங்களும், பிரிவு களும், புகுந்து எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத் தவில்லை.
- மேலும் இந்த இஸ்லாம் மார்க்கம், மனிதனை மனித வழிபாட்டிலிருந்து தூரமாக்குகின்றது. எனவே அதிலே விக்ரக வணக்கங்களுக்கோ சிலை வணக் கங்களுக்கோ இடம் கிடையாது.
- மேலும் பணிந்து போதல், பயப்படுதல், உகப்பு வைத்தல், போன்ற அனைத்து விடயங்களையும் அல்லாஹ்வுக்கே செய்ய வேண்டும்.
- மேலும் அல்லாஹ் பற்றிய தெளிவும், உலகம், உலக வாழ்க்கை பற்றிய தெளிவும், அவை

ஒவ்வொன்றும் மற்றவையுடன் தொடர்புற்றிருப்பது பற்றிய, சரியான கருத்தும் அதிலே வலியுறுத்தப்படுகின்றது.

- மேலும் மனித வாழ்க்கைக்கு தெளிவான ஒரு பொருளையும், குறிக்கோளையும் கொண்டிருப் பதுடன், சந்தோசமான வாழ்க்கைக்கும் வழி காட் டியாக திகழ்கின்றது.
- மேலும் இரண்டு மனிதர்களுக்கிடையில் தார்மீக சன்மார்க்க உறவை ஏற்படுத்துகின்றது. இனம், நாடு, நிறம், செல்வம், போன்றவைகளில் வேற் றுமை காட்டாமல், அனைவரும் ஒரு இன மக்கள் என்ற கொடியின் கீழ் கொண்டு வருகின்றது.
- மேலும் அந்த இஸ்லாம் மார்க்கம் தான், மனித இனத்துக்கு பாதுகாப்பையும், அமைதியையும், மன ஆறுதலையும் ஏற்படுத்தி, மனித சமூகத்தின் அமைதியான வாழ்க்கைக்கு வழி வகுக்கின்றது. ஏனெனில் அனைவரும் அல்லாஹ்வுக்குத்தான் அடிபணிய வேண்டும், அவனுக்கு மாத்திரம்தான் பயப்பட வேண்டும், அவனது நாட்டத்தினடிப் படையின் பேரில் தான் அனைத்தும் நடை பெறுகின்றது, என்ற கொள்கை எந்த மனிதனின் உள் மனதில் ஆழமாக பதிந்து விடுகின்றதோ, அப்போது அவன் எந்தவொரு மனிதனுக்கும் பயப்படவேண்டிய அவசியமில்லை என்ற உறுதி யான கொள்கையுடன் இருக்கின்றான்.
- மேலும் இந்த பூமியில் இருக்கும் மதங்களில் இஸ்லாம் மார்க்கம் மாத்திரம் தான், அல்லாஹ் ஒருவனை மாத்திரம் வணங்க வேண்டும் என்ற, ஒரே கொள்கைக்கு மனிதனை இட்டுச் செல்

கின்றது. அதன் மூலம் அவர்களது ஒழுக்க மாண்புகள், செயற்பாடுகள், சிறப்பம்சங்கள், அனைத்தும் ஒன்றிணைக்கப்படுகின்றது. ஆதலால் தான் மட்டும்தான் ஒழுக்கமுடையவன், நற்கிரியைகள் செய்பவன், மற்றவர்களை விட சிறப்பு மிக்கவன், என்று பெருமை பேச முடியாது. பெருமை அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தானது.

- மேலும் மனிதனுக்கு துன்பங்கள் ஏட்படுமிடத்து, அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட அத்துன்பங்களை அல்லாஹ்வுக்காக பொறுமையுடன் ஏற்றுக் கொண்டு, அவனது அருளில் நிராசையடையாமலும், சலனம் கொல்லாமலும், பொறுமையாக இருந்து பூரண அமைதியையும், அதிலிருந்து விடுதலையையும் எதிர்பார்த்திருக்க வழி வகுக்கின்றது. அது மட்டுமல்ல மனிதனுக்கு எவ்வளவு பெறிய கஷ்டம் ஏற்ப்படுமிடத்தும், அதனை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளுமளவிற்கு மனிதனை பக்குவப்படுத் துகின்றது.

## மறுமையை நம்புதல்.

மேலும் ஒரு மனிதன் அல்லாஹ்வைக் கொண்டு நம்பிக்கை கொண்டால், கட்டாயமாக மரணத்தின் பின்னுள்ள வாழ்வையும் அவன் நம்ப வேண்டும். அதாவது மனிதர்கள் மரணித்ததன் பின் அல்லாஹ் அவர்களை மீண்டும் கப்ரிலிருந்து எழுப்பி, அவர்கள் உலகில் செய்த செயல்களில் சிறியது, பெறியது, நல்லது, கெட்டது, போன்றவைகளை விசாரித்து, அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஏற்றுக் கொண்டு, நற்கிரியைகள் செய்தவர்களுக்கு சன்

மானமாக சுவர்க்கத்தையும், அவனுக்கும், அவனது தூதருக்கும் மாற்றம் செய்து, மனோ இச்சைகளுக்கும் வழி கேடர்களுக்கும் கட்டுப்பட்டு வாழ்ந்தவர்களுக்கு, நரகத்தைக்கொடுத்து தண்டிப்பான் என்றும் நம்புவதாகும்.

இது தான் சுருக்கமாக இஸ்லாம் கூறும் மறுமையைப் பற்றிய கருத்தாகும். எனினும் மறுமை, சுவர்க்கம், நரகம், பற்றி சில கூட்டத்தினரும் மதங்களும், கூறுவதென்ன?. அவர்களது கற்பனைகளையும், கருத்துக்களையும், எந்தவொரு மார்க்கமும், சீரான சிந்தனையும் ஏற்றுக் கொள்ளுமா? என சற்று ஆறாய்ந்து பார்.

அவர்கள் என்ன கூறுகின்றார்கள்.

- அவர்களில் சிலர் மனிதனது மரணத்துடன் அவனது எல்லா விடயங்களும் முடிவு பெறுகிறது. நன்மை, தீமை, பற்றிய கேள்வி கணக்கோ, அவைகளுக்குரிய சன்மானமோ, அல்லது தண்டனையோ, சுவர்க்கமோ, நரகமோ, கிடையாது என்றும், ஏனைய மதங்களிடத்தில் இருக்கும் மறுமையைப்பற்றிய கருத்து, அவர்களை பின்பற்றுபவர்கள் அவர்களைப் பிறிந்து விடாமல் தொடர்ந்தும் பின்பற்றுவட்கு, அவர்கள் ஏற்படுத்திக் கொண்ட கட்டுக் கதையேயாகும் என்று கூறுகின்றனர்.
- இன்னும் சிலர் மறுமையில் உயிர்கள் மாத்திரம் தான் எழுப்பப்படும். உடல்கள் முற்றிலும் அழிந்து அவைகளின் அடையாளங்களே இல்லாமல் போவதால் அவைகள் எழுப்பப்பட மாட்டாது, என்று கூறுகின்றனர்.

- இன்னும் சிலர் சுவர்க்கம் நரகம் என்பது, சில கருத்துக்களையே குறிக்கும். அதாவது சுவர்க்கம் என்றால் நல்லவைகளும் அவைகளை செய்வதும், நரகம் என்றால் கெட்டவைகளும் அவைகளை செய்வதும் தான் என்று கூறுகின்றனர்.
- இன்னும் சிலர் மறுமையில் சுவர்க்கம் என்பது உண்டு. அதில் அவர்களும் அவர்களைப் பின் பற்றியவர்களுமே நுலைவார்கள். எவ்வாறெனில், எப்போது அவர்கள் அவர்களது கடவுள்களை, அவை மனிதனாக இருந்தாலும் சரி, கற்களாக இருந்தாலும் சரி, வேறு ஏதாவது பொருட்களாக இருந்தாலும் சரி, அவர்களுக்குரிய முறையில் வணங்கி, வழிப்படுகின்ற போது தான் நுழைவார்கள் என்று கூறுகின்றனர்.
- இன்னும் சிலர் நாம் ஏன் அல்லாஹ்வை வணங்குவதிலும், தொழுவதிலும், நோன்பு பிடிப்ப திலும், கஷ்டப்பட்டு எமது பொன்னான வாழ்க்கையை வீனான முறையில் அழித்துக் கொள்ள வேண்டும். நமக்குத்தான் நிறைய செல்வமும், சொத்தும், இருக்கின்றது. நம்மிடத்திலுள்ள பணத்தின் மூலமும், செல்வத்தின் மூலமும், அல்லாஹ் விடத்திலிருந்து பாவ மண்ணிப்பையும், அதன் மூலம் சுவர்க்கத்தில் உயர்ந்ததோர் இடத்தையும் பெற்றுக்கொள்ளலாம் என்று கூறுகின்றனர்.

இவைகள் தான் அவர்கள் மறுமையைப் பற்றி கூறும் சில கருத்துக்கள். எனவே இவைகளை எந்த அறிவு ஜீவியோ, அல்லது சரியான நேர்மையான எந்த மார்க்கமோ ஏற்றுக்கொள்ளுமா? என்று சிந்திப்

போமேயானால், நிச்சயமாக அக்கருத்துக்களை ஒரு போதும் ஏற்றுக்கொள்ள மாட்டாது. ஏனெனில் அது நீதமற்ற செயலும் அநியாயமுமாகும்.

உலகில் வாழக்கூடிய மனிதன் அல்லாஹ்வை வணங்கி வழிப்படக் கூடியவனாகவோ, வெறுக்கப் பட்டவைகளை செய்து இஸ்லாத்தை விட்டும் தூரமானவனாகவோ இருப்பான் அல்லது எல்லை மீறிய அநியாயக்காரனாகவோ, அநியாயம் செய்யப்பட்ட அப்பாவியாகவோ இருப்பான். அல்லது உலோபித்த னமுடைய செல்வந்தனாகவோ, பரம ஏழையாகவோ இருப்பான். இது போன்று உலகில் வாழும் மக்கள் பல தரப்பட்ட முறையில் வாழ்ந்து விட்டு, மறுமையில் அனைவருக்கும் ஒரே படித்தரத்தில் ஒரே அந்தஸ்தில் கூலி கொடுக்கப்படுவது, உண்மையான முஸ்லிமுக்கும், அநியாயம் செய்யப்பட்ட அப்பாவியுக்கும், பரம ஏழைக்கும் செய்யப்படும் பெறும் அநியாயமாகும்.

உதாரணத்துக்கு எடுத்துக் கொள்வோம். நானோ நீயோ, சிறந்த சிந்தனையுள்ள வேறு எந்த மனிதனோ, யாராக இருந்தாலும் சரி, பாடசாலையில் படிக் கக்கூடிய மாணவர்களின் பெறுபேறுகள் ஒரே தரத்தில் இருப்பதை ஏற்றுக்கொள்வோமா? ஒரு போதும் ஏற் றுக் கொள்ள மாட்டோம். அவ்வாறு ஏற்றுக் கொள்ள வும் முடியாது. ஏனெனில் அவர்களில் இரவு பகல் தூங்கமின்றி கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் சிறந்த முயற்ச்சிகளை மேற்கொண்டு படித்த மாணவர்களும், அதே நேரம் பாடங்களில், கவனம் செலுத்தாமல் பொடுபோக்காகவும், சோம்பேரித்தன மாகவும், வீண்விலையாட்டுக்களிலும், தனது வாழ்க்கையை கழித்து விட்டு பரீட்சைக்குத் தோற்றிய மாணவர்களும் இருப்பார்கள். மேலும்

அவர்களில் பரீட்சைகளில் சதிமோசம் செய்யாத நேர்மையானவர்களும், சதிமோசம் செய்து பரீட்ச்சை எழுதிய மோசமானவர்களும் இருப்பார்கள். இவ்வாறு மாணவர்களில் பலதரப்பட்டவர்கள் இருக்கும் போது, அவர்களது இறுதிப் பெறுபேறுகள் ஒரு போதும் சமமாக முடியாது, அவ்வாறு சமமாகுவதை எவரும் ஏற்றுக் கொள்ளவும் மாட்டார்கள். இவ்வாறான முடிவுகளை உலக விடயத்திலே ஏற்றுக் கொள்ள முடியாத போது, மறுமை விடயத்தில் எப்படி நியாயமாகும்?.

## இஸ்லாத்துக்கும் முஸ்லிம்களுக்கும் இடையில் உள்ள வேறுபாடுகள்.

இன்று சில முஸ்லிம்கள் செய்யும் இஸ்லாத்துக்கு அப்பாற்பட்ட தவறான செயல்களான, அநியாயம், பொய், சதிமோசம், இது போன்ற இஸ்லாம் மார்க்கமும், உண்மையான முஸ்லிம்களும் வெறுக்கும், எண்ணற்ற செயல்கள் உலகில் மலிந்து காணப் படுவதால், நீ இஸ்லாத்தில் நுழைவதனையிட்டு, சற்று யோசிக்கலாம் அல்லது பின்வாங்கலாம். எனினும் நீ அவ்வாறு செய்வதற்கு முன்னால், இஸ்லாத்தையும் இஸ்லாமிய பெயரில் வாழும் முஸ்லிம்களையும், பிரித்து நோக்க வேண்டும். ஏனெனில் இஸ்லாத்துக்கும் இஸ்லாத்தை பின்பற்றும் முஸ்லிம்களுக்கும் இடையில் பாரிய வித்தியாசங்கள் இருக்கின்றன. இஸ்லாம் என்பது பரிசுத்தமான அல்லாஹ்விடமிருந்து வந்த மார்க்கமாகும். அது பூரணமானதும் கன்னியமிக்கது மாகும், ஆனால் முஸ்லிம்கள் என்ற பெயரில் அதனைப் பின்பற்றும் மனிதர்கள் தான், இஸ்லாத்தில் கூறப்பட்

டுள்ள நல்லவைகளையும் இஸ்லாத்துக்கு அப்பாற் பட்ட தவறுகளையும் செய்கின்றார்கள்.

எனவே அவர்கள் எப்போது இஸ்லாம் கூறும் நேர்மையான வழி முறைகளை ஏற்று, அவைகளை தமது வாழ்வில் அமுல்படுத்துகின்றார்களோ, அப்போது தான் அவர்கள் உண்மையாக இஸ்லாத்தை பின்பற்றும் உண்மையான முஸ்லிம்களாவார்கள். மாற்றமாக அவர் கள் அதனை விட்டும் தூரமாகி, தான் நினைத்தவாறு தனது மனோ இச்சைகளுக்கு கட்டுப்பட்டு வாழ்ந்தால், அவர்களின் செயற்பாடுகளுக் கேட்பவே அவர்களுக்கு இஸ்லாமியத் தரம் தீர்மானிக்கப்படும்.

எனவே நீ இந்த மார்க்கத்தை அதனது அடிப்படை யுடனும், தெளிவான முறையிலும், அல்லாஹ் எந்த வடிவில் இறக்கி வைத்தானோ அதே தூய வடிவி லும் அறிய விரும்பினால். அல்லாஹ் இறக்கி வைத்த புனித வேதமான அல்குர்ஆன் மூலமும், அதனது விளக்கப் புத்தகங்களான (தப்ஸீர்கள்) மூலமும், எமக்கு நேர் வழிகாட்ட வந்த இறுதித்தூதர் முஹம்மத் நபி (ஸல்) அவர்களின் பொன்மொழிகள் மற்றும் அவர்களது வாழ்க்கை முறைகள் மூலமும், அதே போன்று இஸ் லாத்தை உரிய முறையில் பின்பற்றிய உண்மையான முஸ்லிம்களின் வாழ்க்கை நெறி மூலமும், மேலும் தூய்மையான உள்ளம் கொண்ட முஸ்லிம்கள் தொகுத் தளித்த இஸ்லாமிய நூல்களைப் படித்து தெளிவு பெறுவது கொண்டும் உனக்கு தெறிந்து கொள்ள லாம்.

அவ்வாறு நீ மேற்கூறப்பட்டவைகளில் தேடி, உண் மையான மார்க்கமான இஸ்லாத்தை அறிந்து கொண்டால், நிச்சயமாக நீ உண்மை மார்க்கமான இந்த இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவனாக

அல்லாஹ்வுக்கு கட்டுப்படுவாய் என எதிர் பார்க்கின்றோம்.

**இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளும் போது ஏற்படும் பிரச்சினைகளை, அதற்குத் தடையாக ஆக்கிக் கொள்ளாதே.**

அதாவது நீ மேற்கூறப்பட்டவைகளை வாசித்து உணர்ந்து, இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ள முனைந்தால், ஒரு வேலை பெற்றோர்கள், அல்லது மனைவி பிள்ளைகள் கோபிப்பார்கள், அல்லது அதனால் தொழில் வேலை வாய்ப்புக்கள் நீங்கி விடும், அல்லது தனது நண்பர்கள் தன்னை விட்டும் தூரமாகி விடுவார்கள், அல்லது சமூகமே தன்னை வெறுத்து விடும், அல்லது வேறு ஏதாவது பிரச்சினைகள் ஏட்படலாம் என்றோ, மனதில் சலனத்தையும் சஞ்சலத்தையும் ஏற்படுத்தி, மறுமையில் அல்லாஹ்வால் உண்மையான முஸ்லிம்களுக்கென ஏற்படுத்தி வைக்கப்பட்டிருக்கும், சிறந்த வாழ்க்கையை நீ பெற்றுக் கொள்வதை தடுப்பதட்காக, உனது விரோதியான ஷைத்தான் எனும் வழிகேடனும், உனது கெட்ட நண்பர்களும் முயற்ச்சி செய்யலாம்.

ஆனால் நீயோ! அவைகளை ஒரு போதும் தடையாக எடுத்துக் கொள்ளாதே. மாற்றமாக அவைகளை உனது முதுகுக்குப் பின்னால் தூக்கி எறிந்து விட்டு, அனைத்துப் பிரச்சினைகளையும் அல்லாஹ்விடம் ஒப்படைத்து விட்டு அவனிலே நம்பிக்கை வைத்தவனாக, அவன் தான் உன்னை அனைத்து துன்பங்களிலிருந்தும் பாதுகாத்து, உதவி செய்வான் என்ற நம்பிக்கையுடனும் உறுதியுடனும்

மனதை திடப்படுத்தி தைரியசாலியாக இருந்து கொள்.

எப்போது நீ அந்த முடிவுக்கு வருகின்றாயோ, அப்போது உனது வாழ்விலே சிறந்ததோர் முடிவை எடுத்து விட்டாய். ஏனெனில் உலகில் உண்மை தான் பின் பற்றப்பட வேண்டும். பின்பற்றுவதற்கு அது தான் தகுதியானதும் கூட. அது தான் உலகிலே எல்லா மனி தர்களையும் விட உயர்ந்தது, மறுமையில் நெறுங்கிய உறவினராக இருந்த போதும், பாவம் செய்து வாழ்ந்த மக்களுக்கு தண்டனை வழங்கப்படும் போது, எவரும் எவருக்கும் உதவிட முடியாது. அது மட்டுமல்ல அந்த நாளில் யாரும் யாருடைய பாவத்தையும் ஏற்று, மற்ற வருடைய தண்டனையை தான் அனுபவிக்க முன் வரவுமாட்டார்கள்.

## இலகுவான இஸ்லாமிய வணக்கம்.

மேலும் இந்த இஸ்லாம் மார்க்கத்தினது வணக் கங்களைப் பற்றி, அவை அதிகமானது கஷ்டமானது என்று, இஸ்லாத்தின் எதிரியும் உனது விரோதியுமான ஷைத்தான் உனக்கு எடுத்துக்கூறுவான். ஏனெனில் நீ இஸ்லாத்தை ஏற்று அதன் படி நடப்பதை அவன் ஒரு போதும் விரும்ப மாட்டான். எனவே அவன் கூறும் அக் கருத்து சரிதானா? என தெரிந்து கொள்ள இஸ்லாத்தின் வணக்கங்கள் பற்றி, அறிந்து கொள்வது உனக்கு அவசியமாகும்.

இந்த உலகில் யார் யாரெல்லாம் இஸ்லாம் மார்க் கத்தை உணர்ந்து, அதனை ஏற்றுக் கொள்ளவிருக் கின்றார்களோ, பொதுவாக அவர்களுக்கு நாம் தெறி யப்படுத்துவது, இஸ்லாம் மார்க்கம் இலகுவானதே. அதனது கொள்கைகள் உயர்ந்தவையும், அனைத்து

உள்ளங்களும் ஏற்றுக்கொள்ளக் கூடியவையும், அதனது இறைக்கோட்பாடு இலகுவானதும் தூய்மையானதும், அது எடுத்தியம்பும் ஒழுக்க மாண்புகள் அதி உயர்ந் தவையுமாகும்.

இஸ்லாம் கூறும் வணக்கமென்பது அல்லாஹ் வையும், அவனது இருதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களையும், ஏற்றுக்கொண்டதன் பின், முக்கியமாக செய்யவேண்டிய கடமை, நாளாந்தம் ஐவேளை தொழுவதும், அதே போன்று வருடத்தில் ஒரு மாதம் நோன்பு நோற்பதும், வசதி படைத்தவர்கள் இஸ்லாம் கூறும் நிபந்தனைகளுக்குற்பட்டிருந்தால், இஸ்லாம் கூறும் எட்டுக் கூட்டத்தினருக்கு ஸகாத் என்னும் ஏழை வரியை கொடுப்பதும், பணத்தாலும் பாதை யாலும் வசதி படைத்தவர்கள், வாழ்க்கையில் ஒரு முறை மக்கா நகரம் சென்று, ஹஜ் கடமையை சம்பூர் ணமாக நிறை வேற்றுவதும். அதே போன்று இஸ்லாம் கூறும் ஏனைய கடமைகளையும் நிறைவேற்றுவதுமாகும்.

## அடியார்களின் வணக்க வழிபாடுகளால் அல்லாஹ்வுக்கு எவ்விதப் பிரயோஜனமு மில்லை.

நிச்சயமாக இறைவன் எமது வணக்கங்களை விட்டும் தேவையற்றவன். சில பெருமை பிடித்தவர்கள் நினைப்பது போல, எமது வணக்கங்கள் அவனுக்கு பிறயோஜனத்தையோ, அல்லது நாம் செய்யும் பாவங் கள் அவனுக்கு தீங்கையோ, அல்லது எந்த குறை யையோ ஏட்படுத்தப் போவதில்லை, என்பதனையும் நீ புறிந்து கொள்வாய் என எதிர்பார்க்கின்றோம்..

மாற்றமாக அவ்வாறு அந்த அல்லாஹ்வுக்கு, வழிப்படுவதன் மூலம் இவ்வுலக வாழ்க்கையில் மன

நிம்மதி, சுக பாக்கியம், உணவு விருத்தி, மரணப் பயமின்மை, பாவங்களை செய்வதை விட்டும், நீங்கிக் கொள்ளல், செல்வப் பெறுக்கு, குடும்பம் குழந்தை போன்றவற்றில் விருத்தி, மேலும் மனிதனுக்கு ஏற்படும் துன்பங்களின் மூலம் நலவை எதிர்பார்த்தல், இது போன்ற இன்னோரன்ன விடயங்கள் மூலம் மனிதன் தான் பிரயோஜனம் அடைகின்றான்.

அதே போன்று தான், மறுமையிலும் நரகிலிருந்து பாதுகாப்பையும், சுவர்க்கத்தைப் பெறும் நற்பாக் கியத்தையும் பெறுகின்றான். அல்லாஹ் தஆலா தன்னை வழிப்பட்டு வாழ்ந்த மனிதர்களுக்கு, சுவனத்தில் கண்கள் கண்டிராத, காதுகள் கேட்டிராத, எந்த சிந்தனையாலும் கற்பனை செய்து பார்க்க முடியாத, அருட் கொடைகளை தயார் செய்து வைத்துள்ளான். அதே போன்று அவனுக்கு மாறு செய்து வாழ்ந்த நிராகரிப்பாளர்களுக்கு உலகிலிருக்கும் நெருப்பை விட எழுபது மடங்கு கொடூரமான நெருப்பை நரகிலே ஏட்படுத்தி, அதன் மூலம் அவனை வேதனை செய்ய காத்திருக்கின்றான். அல்லாஹ் தஆலா அதை விட்டும் நம்மனைவரையும் பாதுகாப்பானாக...

நீ விழிப்படைய மேற்கூறப்பட்ட இந்த சுவர்க்கம் நரகம் பற்றிய விளக்கமே போதும். இது வரையும் வாழ்ந்த உனது வாழ்க்கையில், உனக்கு ஏற்பட்டிருப்பது இலாபமா? நஷ்டமா? என சிந்தித்து, தெளிவு பெறுவதை எதிர் பார்க்கின்றோம்.

நீ இவ்வுலகில் வாழும் போது, 80 – 100 வருடங்கள் தான் வாழ்ந்தாலும், அல்லது அதற்கு கூடவோ குறையவோ வாழ்ந்தாலும், என்றோ ஒரு நாள் மரணித்து, உன்னை படைத்த இரைவனை சந்

திக்கத்தான் போகின்றாய், அந்த நாளிலே நீ உலகில் செய்த நன்மை தீமைகள் பற்றி, கேள்வி கணக்குகள் கேட்கப்படும் என்பதை மறந்து விடாதே।

நிலமை அவ்வாறு இருக்கும் போது, மரணித்ததன் பின் ஏற்படவிருக்கும் கேள்வி கணக்கு, கூலி வழங்கள், சுவர்க்கம், நரகம், போன்றவைகளையும் புறக்கனித்து, நாளை நிறந்தரமாக வாழவிருக்கும் சுவன இன்பத்துக்குப் பதிலாக,. இந்த அழிந்து போக விருக்கும் அற்ப உலக வாழ்க்கையின், கொஞ்ச இன்பத்தை அனுபவித்து விட்டு மரணிப்பதை எந்த மனிதன் தான் ஏற்றுக்கொள்வான். நீ அவ்வாறு நடந்து கொண்டால், அது உனது அறிவீனமும் கோழைத்தனமுமாகும்.

எனவே இன்னும் உனக்கு அவகாசம் இருக்கின்றது. உனது வாழ்நாளில் இன்னும் மீதமிருக்கின்றது. ஆதலால் வாழப்போகும் எஞ்சிய கொஞ்ச வாழ் நாளிலாவது, உலகிலிருக்கும் மார்க்கங்களில் உண் மையான மார்க்கமான, உன்னைப் படைத்த அல் லாஹ்வால் ஏற்றுக்கொள்ளப்பட்ட மார்க்கமான இஸ் லாத்தை ஏற்று, அதன் படி நடக்க நீ விரைந்து வருவாய் என எதிர்பார்க்கின்றோம்....

## இறுதியாக.

உனது உள்ளம் இஸ்லாத்தையும் அதன் கோட் பாடுகளையும் ஏற்றுக்கொள்ளவும், மேற் கூறப்பட்ட விட யங்கள் உனது சிந்தனைக்கு வழி காட்டி யாகவிருந்து இந்த இஸ்லாத்தை அதன் தூய்மையான வடிவில் பின்பற்றவும், எம்மைப் படைத்து கண்காணித்துக் கொண்டிருக்கும், எல்லாம் வல்ல அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்கின்றோம். எனவே கூடிய கெதியில்

இஸ்லாமியனாக எம்மிடத்தில் வந்து சேர்வதை சந்தோசத்துடனும் ஆவலுடனும் எதிர் பார்த்து, அவ்வரவை அக மகிழ்வுடன் வரவேட்கின்றோம்....

மேலும் இஸ்லாத்தைப் பற்றிய மேலதிக விளக்கங்களுக்கு பின் வரும் எமது தொலை பேசி இலக்கத்துடனோ, அல்லது முகவரியுடனோ, தொடர்பு கொள்ளவும்.

இஸ்லாமிய வழி காட்டி அழைப்பு மையம் ஷிபா,
ரியாத்.த, பெ, இல 31717 அல் ரியாத் 11418.
தொ, பேசி, இல 4222626 – 4200620

وصلى الله تعالى وسلم على نبينا محمد وآله وصحبه وسلم.

سلسلة مطبوعات المكتب بغير اللغة العربية رقم (٣٦)

# رسالتنا إليك

باللغة التاميلية

إعداد
الشيخ عبد الله عبد العزيز العيدان

ترجمة
عبد الرحمن عبد الرزاق

مراجعة
محمد حسين

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الشفا - الرياض
هاتف ٤٢٠٠٦٢٠٠ - ٤٢٢٢٦٢٦ ص ب ( ٣١٧١٧ ) الرياض ١١٤١٨